உ

கணபதி துணை.

வாலாஜா தாலுக்கா விலாரிமா நகரத்தைச்சேர்ந்த
சொக்கன் குளத்தருகில் பெழுந்தருளிய

அற்புத கற்பக
விநாயகர்பேரில்

# பத்தும் பதிகம்.

இஃது
திருக் கலவைமாநகரம் வேளாளகுல திலகர்
காலஞ்சென்ற பீஞ்கின் ஹேட் - மோஹனமுதலியார்
குமாரர்களில் ஜேஷ்ட குமாரர்.

இராஜரத்தின முதலியார் அவர்களின்
வேண்டுகோளின்படி
ஷை கலவை சென்னசமுத்திரம் வீரசைவ
ஜெகத்பிரசித்த வித்வான்
குமரர்சாமி வாத்தியார் குமரர்
கு. துரைசாமி தம்பிரான் அவர்களால்
இயற்றியது.

...லூர் :
...ல அச்சுக்கூடத்திற்
...க்கப்பட்டது.
1917.



உ

கணபதி துணை.

# சாற்றுகவி.

ம-ா-ா-ஸ்ரீ, சணியம்பாடிமாநகரம் விஸ்வகுலம் வித்துவான்

## லிங்காச்சாரி அவர்களால்

இயற்றியது.

---

கார்மேவும் மாடகிரக் கலவை வாழ்வோன்
கருணைபுரி கணபதியின் பதிகம் சொற்றோன்
பார்மேவு நாடகங்கள் பலவியற்றி
பரத சாஸ்திரம் முறையி லாடுவித்தோன்
பேர்மலி குமாரசாமி தம்பிரான்றன்
பெருந் தவத்தா லவதரித்தோன் வீரசைவ
தார்மேவு கந்தரத்தோன் தந்தையைப்போல்
தமிழ் வல்லோன் துரைசாமி தம்பிரானே.



உ

கணபதி துணை.

# சொக்கன்குளம்
# அற்புத கற்பக விநாயகர் பேரில்
# பத்தும் பதிசம்.

## காப்பு.

### வெண்பா.

சீர்பெருகும் விலாரிககர் சேர்ந்த சொக்கன் தடமதனில்
சார்பவர்க்கு தயைபுரியும் தந்திமுகன்—கேர்பதத்தை
போற்றினேன் பதிகமதை புகலுவதர்க் கென்னுவில்
சாற்றிட வாக்கெந்த னுக்குத்தா.

## ஆசிரிய விருத்தம்.

### ஸ்தலச்சிறப்பு.

சீர்கொண்ட வாவி வயல் சோலை செறி சுனையுமே
சிறந்துமே வாழும் நல்ல
தேங்கு மரம் புன்னை பிலா கதலி மாதளை
செழித் தோங்கும் கமுகு மரமும்
சீர்கொண்ட முகிலினை யளாவிய சறுக்களும்
நிலைவள மதின் பெருமையும்
நீணக்தனைவரும் சிவசிவ வென்றிடும்
கேர்மை கெடுங்கடல் திரைப்போல்

ஆர்கொண் டிரைத்தாலும் அளவிடா தொருகாலும்
அன்பர் தொழு மாலயமுமே
அரிகில் வில்வம் கொன்றை தும்பைமா மலர்களும்
ஆனந்தமாக வளரும்
தார்கொண்டசொக்கன் குளமதனில் வாழ்கின்ற
தண்டலர் முகவிலாசா
சத்தியருள் புத்திரனே பக்தர்க்கருள் கர்த்தனே
தந்திமுக ஐந்துகரனே. (1)

## சுவாமி சிறப்பு.

### விருத்தம்.

நவமணிக ளொளி மகுட முந்நுதலில் வெண்ணீறும்
நண்பர்க்கருள் நயனமழகும்
நாகவதனமு மிருசெவிதனில் ப்ரகாசிக்கும்
நற்கவச குண்டலமுமே
குவலயம்தன்னில் வாழ் தத்தைகளும் கூசும் நல்
குளிர்ந்திடு மமுர்த மொழியும்
கோர்த்த நித்திலமதை பழித்திடும் தந்தமது
குன்றி லுதித்திடும் பானுபோல்
யெவர்களும் மதிப்பிடா ஆரகேயூர மாலை
யின்பமுடனே யணிந்தும்
மிருதோளி லணி புஜகீர்த்தி பீதாம்பரமும்
எழிலுந்தி யிடையும் நடையும்
தவமுனிவர் போற்றும் சொக்கன் குளமதனில் வாழ்
தண்டலர் முகவிலாசா
சத்தியருள் புத்திரனே பக்தர்க்கருள் கர்த்தனே
தந்திமுக ஐந்து கரனே. (2)

## வாத்தியச் சிறப்பு.

முகவீணை கெண்செட்டு துத்தாரி கபுரியும்
முழங்கோசை நாகசுரமும்
முரசு பாங்கா டவில் கிடுகு நகபோத்துமே
மோர்சிங்கு வாத்தியமுமே
ஜெகமதோர் புகழ்வீணை தம்பூர் மிருதங்கமும்
சிறுவர்க ளிசைப் பாடலும்
சேர்ந்து ஜாலர் தாளம் அரமுனையம் சுதிகூட்டி
சிறந்தகல் பிடில் வாத்தியமும்
சுகமுடன் பேசும் கிளானட்டு சாரங்கம்
திலங்கு முன்னிலேயி லன்பாய்
தோத்திரம் செய்திடும் மன்பர்க்கருள் தரும்
சுருதி முதல் கருதும் முருவே
தகைமையுடன் சொக்கன்குள மதனில் வாழ்கின்ற
தண்டலர் முகவிலாசா
சத்தியருள் புத்திரனே பக்தர்க்கருள் கர்த்தனே
தந்திமுக ஐந்து கரனே. (3)

காதலா யுந்தனை கதியெனப் போற்றினேன்
காப்பதுன் பாரமையா
கங்கையை யணிந்திடும் சங்கர னீன்றிடும்
கமலமகள் மகிழு மருகா
சிதர னமக்கவுந் திகிரியை யளித்தவா
சித்தம்வைத் தருள்சமயமே
திக்குனையன்றி யார் ஊந்தனைக் காப்பது
திருவடி தந்தாளுமே

சாதனமதாய்ப் பிரதி சுக்கிர வாரங்களும்
தரிசனமளிக்குங் கோவே
சர்வ வுயிர் யாவைக்கும் ஆதாரமாய் நின்ற
சத்விஷய முத்தருளம் வாழ்
தரதவிழ சொக்கன் குளமதனில் வாழ்கின்ற
தண்டலர் முகவிலாசா
சத்தியருள் புத்திரனே பக்தர்க்கருள் கர்த்தனே
தந்திமுக ஐந்து கரனே (4)

ர்னமு முன் மன மிரங்கிட வில்லையோ
யேழையான் யென்ன செய்வேன்
யெந்தனுக் கார்துணை யுந்தனை நம்பினேன்
வந்தெனை யாளுமையா
அன்னையும் தந்தையுமான நீரிப்போது
அகலவிடுவ தாமோ
அஞ்சலென வுந்தனிரு கஞ்சமல ரடிதனே
அனு தினமுமே துதிக்க
நன்னய முடனெனது நாவினி லென்னாளும்
நலமுட னிருக்க
நாடினே னுன்னடியை தேடினேன் வோடிநீர்
நல்வாக் கருள்புரிகுவீர்
தண்மலர்சூழ் சொக்கன் குளமதனில் வாழ்கின்ற
தண்டலர் முகவிலாசா
சத்தியருள் புத்திரனே பக்தர்க்கருள் கர்த்தனே
தந்திமுக ஐந்து கரனே. (5)

வண்டு மொய்க்குழல் உமாதேவி மகிழ் பாலனே
வந்தருள் இஅசமயமே
வள்ளலே உன்னுடைய பிள்ளையின் மீது தாம்
வர்மங்கள் செய்யொணாது

உண்டை வடை அதிரசம் மனோகரம் பூந்தியும்
உளுந் தவல் பயர் கடலையும்
உயர் பிலா கர்ச்சூரி கதலி பாகு கன்னல்
உச்சித எலுமிச்சனும்

அண்டி யுன தடியிணைக் காரார்த்தனை செய்தேன்
ஆகு வாகன யோகனே
அல்லலதை நீக்கியே நல்வழியுண்டாக்கிடும்
அச்சுதன் இச்சை மருகா

தண்டலம் தரும் சொக்கன் குளமதனில் வாழ்கின்ற
தண்டவர் முகவிலாசா
சத்தியருள் புத்திரனே பக்தர்க்கருள் கர்த்தனே
தந்திமுக ஐங்கரனே. (6)

எப்போதும் வுன்னடிக் கடிமை செய்யாமலே
இல்வாழ்வை பெரிதென்றனை
யெண்ணி பலருக் கனம் யென்றும் கொடாமலே
யேங்கி தவிக்குசென்ன
யிப்போ தாகிலும் யான் திருப்ப வென்றால் கர்ம
வினை வந்து போருடுதே
வீணை காயமிது வென்றாலுமோ ஆசை
வெகுவாய் கினைக்குதென்ன

சொர்ப்பனத்திலும் வுனது துணையடி மறவாமல்
தொழுதிடும் படியெனக்கு
தொல்லைதனை நீக்கியே நல்லருள் புரிந்திடும்
சுத்தமொடு இத்தலத்தில்
தப்பாமல் போற்றும் சொக்கன் குளமதனில் வாழ்
தண்டவர் முகவிலாசா
சத்தியருள் புத்திரனே பக்தர்க்கருள் கர்த்தனே
தந்திமுக ஐந்துகரனே. (7)

குணைவைத் தெந்தனை காப்பதின் பாரமே
கதியெனவுன் குளடைந்தேன்
கரைமிடற் றண்ணலை மாங்கனிக் காவலம்
கந்தர்க்கு முன்வந்தவா
அருண னுலவும் இந்த ஆழிசூ ழுலகில் வாழ்
அன்பருக் கருள் செய்திடும்
ஆதியே அருள்தரும் சோதியே வந்தெனது
அகமது களிக்க இன்று
பெருமையுடனே பெருச்சாளி வாகனமேறி
பிரியம் வைத்தெனை யாண்டிடும்
பிலம் தலம் ஆகாயம் மதிலுள்ளோர் போற்றிடும்
பெருமையாய் நின்ற சுடரே
தருணமெனை காக்க சொக்கன் குளமதனில் வாழும்
தண்டவர் முகவிலாசா
சத்தியருள் புத்திரனே பக்தர்க்கருள் கர்த்தனே
தந்திமுக ஐந்து கரனே. (8)

ஓர்தந்தமதை யொடித்தே பாரதந்தனை
யுகத்தெழுதிய முதல்வனே
உந்தனிட மகிமைதனை யுரைத்திட லாகுமோ
வுலகில்வாழ் யாவருக்கும்
நேறதை யெடுத்து கணநாத வென்றே மனதில்
நிலைமை யுடனே பஜித்தால்
செடுந்தூரமே பரக்கு பம்பு சூனியம்
நிகரிலா வைப்பு குணமும்
பார்மீது வுனைப் பஜித்திடு மன்பருக்கு நல்
பதமதையே நிதமும் புரியும்
பங்கயப் பாதனே சங்கையேன் சிறுவனை
பாதுகார்த்தருளுமையா
தார்கொண்ட சொக்கன் குளமதனில் வாழ்கின்ற
தண்டவர் முகவிலாசா
சத்தியருள் புத்திரனே பக்தர்க்கருள் கீர்த்தனே
தந்திமுக ஐந்துகரனே. (9)

தலைவலி முக ஜென்னி காமாலை சொரியுமே
தங்கிடு மேகநீரும்
தந்த நோய் வயர் வலி குன்மம் பக்கப்பிளவு
, ஜல பீனிசச் சூலையும்
குலைநோவு நீரொழுகுக் குஷ்டம் வெப்புரிதியும்
கொடு அண்டவாத மிவையும்
குண்ணவைக்கும் கண்டமாலை இவைகளையுமே
கோரி உந்தனை பஜித்தால்

நிலையை விட்டலரியே அபயமென் றோடிடும்
நில்லாமல் அல்லல்பட்டு
நெடுநெந்தூரமே பாந்தோடிடும் நின்னுடைய
நீரை யணிந்தால் யாவுமே

தலமதோர் புகழ் சொக்கன் குளமதனில் வாழ்கின்ற
தண்டலர் முகவிலாசா
சத்தியருள் புத்திரனே பக்தர்க்கருள் கர்த்தனே
தந்திமுக ஐங்கரனே. (10)

வலவைமா நகர்தனில் அவதரித்திட்டிடும்
காராள குலதிலகனும்
கவர்மெண்ட் ஏட்டு பிஞ்சின் காலம்சென்ற நல்
கருது மோஹன முதலியார்

நலமுடனவர் தவமதி லுதித்திட்ட கன
நாவலர்க் குபகாரனும்
நாற்றிசைப் புகழ் ராஜரத்தின முதலியார்
நண்பனுளம் அன்புகூர்ந்து

சிலை நுதல் விழிவல்லபை மணவாளன்மேல்
சிறந்திடும் பதிகமதனை
சென்னச்சமுத்திரந் துரைசாமி யாலிதனை
செப்பிடச் செய்ததாலே

தாலப் புகழ் சொக்கன் குளமதனில் வாழ்கின்ற
தண்டலர் முகவிலாசா
சத்தியருள் புத்திரனே பக்தர்க்கருள் கர்த்தனே
தந்திமுக ஐங்கரனே (11)

சொக்கன்குளம் அற்புத கற்பக விநாயகர்பேரில்
பத்தும்பதிகம் முற்றிற்று.

உ

கணபதி துணை.

வாலாஜா தாலூக்கா (ஆற்காடு - திமிரி)

விலாரி மாநகரத்தைச்சேர்ந்த

சொக்கன் குளத்தருகில் யெழுந்தருளிய

அற்புத கற்பக விநாயகர்பேரில்

# பத்தும் பதிகம்

தேவையான பக்திமான்கள் அடியிற்கண்டவர்களிடம் பெற்றுக்கொள்ளலாம்.

விலாஸம் :—

மோ. இராஜரத்தின முதலியார்,
கலவை கிராமம், கலவை போஸ்டு,
வாலாஜா தாலூக்கா.

டை நூ லியற்றிய—

கு. துரைசாமி தம்பிரான்,
சென்னசமுத்திரம் கிராமம், கலவை போ.
வாலாஜா தாலூக்கா

